


௨௫

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - ஆடி- 2014 - ஜூலை

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய – ஆடி – 2014 – ஜூலை இதழ் – 25

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்".
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




பண்கொண்ட பரந்தாமன் பின்பி றந்த
பவளவாய்ப் பெருமாட்டி நேமம் சார்ந்து
பாய்கின்ற தேனாற்றங் கரையின் பாங்கர்
பனித்துளியாம் முடிகொண்ட பூக்கள் எல்லாம்
பரசிவையாம் திருநெல்லை வதனம் பார்க்க
மண்கொண்டும் அடிகொண்டும் பிட்டை உண்டும்
மதுரையினை அரசாண்ட சுந்த ரேசன்
மறையோதி மகஞ்செய்தும் காணா ஈசன்
மலரடிகள் வன்னிவனம் பட்ட தாலே
மாதவத்தார் வணங்கியதால் மகிமை கொள்ள
விண்கண்ட தேவர்களும் வந்து வந்து
விடையேறி தாள்வணங்கிப் பாண்டி யன்தன்
வீரவாள் மறைத்திட்ட வித்தை எண்ணி
வியன்கொற்ற வாளீசர் நெல்லைத் தாயை
வேதமுதற் காரணனை வியந்து போற்றிக்
கண்கண்ட தெய்வமெனக் கசிந்து பாடிக்
கைதொழுத காரணத்தால் தவத்தோர் தெய்வம்
கவின்முத்தி ராமலிங்கர் கட்டி வைத்த
கலைநயஞ்சார் ஆலயத்துள் கால மெல்லாம்
கருணைபொழி தெய்வதமே போற்றி போற்றி.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

பக்திநெறியில் இசைக்கும் பாடல்களுக்கும் ஒருமுக்கியமான இடம் உண்டு. சமணமதம் தமிழ்நாட்டிலே நிலைகொள்ளத் தொடங்கிய காலம்; திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலிய மூவர்முதலிகள் தங்கள் இசைப் பாடல்களால் மக்களைத் தங்கள்பால் ஈர்த்தார்கள். ஊர்ஊராகச் சென்று இறைவனின் கல்யாண குணங்களைப் பாடித் தொழுதார்கள். இறைவனுடைய அருளையும் ஆற்றலையும் மக்களுக்குப் பாடல்கள் மூலம் பாடிப் புகட்டினார்கள். இவர்களின் பக்திப் பரவசம் மக்களைத் தொற்றிக் கொண்டது. கூட்டம் கூட்டமாகப் பின் வரத் தொடங்கினார்கள். சமயக் குரவர்கள் பின்னே மக்கள் கூடியது அவர்களின் இசைப் பாடல்களால்தான்.

இவர்களைப் போல வைணவத்திலே ஆழ்வார் பெருமக்கள் பக்தியை வளர்த்தார்கள். இவர்களாலே பல்லாயிரக்கணக்கான பாடல்கள் இசைக்கப் பட்டன; ஆக்கிரமித்த மதங்கள் அகற்றப்பட்டன. அந்த இசையின் வலிமை இன்று வரை தொடர்கிறது.

மூவர் முதலிகளுக்குப் பின்னர்த் தோன்றிய மாணிக்கவாசகப் பெருமான் பக்தியே வடிவமாக உணர்வுப் பிழம்பாக அன்புச் சூறாவளியாகப் பக்தியைப் பரப்பினார். மூவர்முதலிகள் இறைவனின் கல்யாண குணங்களைப் பாடிப் பரவினார்கள். மாணிக்கவாசகப் பெருமான் தமது அனுபவத்தை, ஈசனால் தமக்கு ஏற்பட்ட தாக்கத்தை, உணர்வு வெள்ளத்தைத் தமது பாடல்களிலே பரவவிட்டதன் காரணமாகத்தான், இன்றும் தமிழகம் எங்கும் நகரங்கள், கிராமங்கள்தோறும் திருவாசக முற்றோதல் நடைபெற்றுப் பக்தி உணர்வை ஊட்டுகின்றன, நன்னெறிப்படுத்துகின்றன. இதே போல ஆழ்வார்களிலே ஆண்டாள் தன் உணர்வுகளைப் பாடி அரங்கனைச் சேர்ந்தார்கள்.

பக்திநெறி பரவ மிக இன்றியமையாதன இசைப்பாடல்கள். உலகில்

எல்லா மொழிகளைக் காட்டிலும் தமிழில்தான் அதிகமான, தரமான பக்திப்பாடல்கள் உள்ளன என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

அண்மைக் காலங்களில் பாதயாத்திரை செல்லும்பழக்கம் அதிகமாகிவருகிறது. பாதயாத்திரைகளில் வழிநடைச் சோர்வும், களைப்பும், மலைப்பும் தெரியாமல் இருக்க இசைப்பாடல்கள் மிகஉபயோகமாக உள்ளன.ஐயப்பன் பாதயாத்திரை, பழநிப் பாதயாத்திரை போன்ற பாடல்கள் தோன்றியபின்னர்தான் அதிகம் பிரபலம் ஆயின. இதனைக் கண்கூடப் பார்த்தவர் நாம். 1975ஆம் ஆண்டு பழநிக்கு நடைப்பயணம் நாம் தொடங்கியபோது ஆயிரத்திற்கும் குறைவான பக்தர்களே நடந்தார்கள். அப்பொழுதுதான் புதிய இசைப்பாடல்கள் எழுதத் தொடங்கியகாலம். பெரும் கவிஞர்கள் அரு.சோ,அரசி போன்றவர்கள் எழுதியபாடல்களாலே கூட்டம் பெருகத் தொடங்கியதற்கு முதன்மைக் காரணங்கள். முன்னர் உள்ள ஆறுமுகசாமி விருத்தம் வெள்ளிமலைக் கந்தர்விளக்கம் போன்ற பாடல்கள் இருந்தாலும் அவை அனைத்தும் விருத்தப்பாடல்கள். இசைப்பாடல்கள்; வலிமறந்துவேகம் கூடி நடக்கப் பெரிதும் உதவின.

நல்லபக்தி இசைப்பாடல்கள் உணர்ச்சியோடுபாடும் போது இறைவன் நம் கண் முன்னேவருவான். கண்ணீர்பெருகிவரும். திருவாசகத்தின் சிவபுராணத்தைப் படிக்கின்றபோதெல்லாம் உணர்ச்சிவசப்பட்டு அழும் நண்பர்கள் உண்டு.

இசைப் பாடல்களுக்கு உள்ளத்தைத் தெளிய வைக்கும் சக்தி உண்டு; பக்தியைப் பெருக்கி மூழ்கடிக்கும் திறன் உண்டு. இறைவனை நோக்கி அழுது அவன் அருளைப் பெற வைக்கும் அருள் உண்டு.

அவனைப் பாடுங்கள். வாய்விட்டுப் பாடுங்கள். உள்ளம் நெக்குருகி நெகிழப் பாடுங்கள். அவன் அருள் கிட்டும். பாடுங்கள்.

*ஆசிர்வாதம்*
*ஸ்ரீசற்குருநாதன் துணை.*

# மடாலய நிகழ்வுகள்

22.6.2014 அன்று திருக்களர் கிருஷ்ணாநந்த சுவாமிகள் குருபூஜை திருக்களரில் நடைபெற்றது.

25.6.2014 அன்று சின்னத்துறவு சுவாமிகள் (கண்டனூர் அருணாசல சுவாமிகள்) குருபூஜையும் 11ஆவது பட்டம் காசி விசுவநாத சுவாமிகள் குருபூஜையும் நடைபெற்றன.

28.6.2014 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சி சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் டாக்டர் கரு. முத்தையா, திருத்தொண்டத் தொகை ஒரு புதிய பார்வை என்னும் தலைப்பில் உரையாற்றினார். முன்னதாகக் காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். பேரா. ம. கார்மேகம் நன்றி கூறினார். அறிஞர் பெருமக்கள் பலர் கலந்து கொண்டு நிகழ்ச்சியினைச் சிறப்பித்தனர்.

5.7.2014 அன்று பள்ளத்தூரில் பெரிச்சியப்ப அய்யா குருபூஜையும் 7ஆவது பட்டம் ஸ்ரீமத் மகாதேவ ஞான தேசிகர் குருபூஜையும் நடைபெற்றன.

8.7.2014 அன்று ஸ்ரீ சபாபதி சுவாமிகள் குருபூஜை நடைபெற்றது.

9.7.2014 அன்று ஸ்ரீமத் இராமநாத ஞான தேசிக சுவாமிகள் (9ஆவது பட்டம்) குருபூஜை நடைபெற்றது.

11.7.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதலாண்டு வகுப்புகள் தொடக்க விழா சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது.

இந்திய - ருஷ்ய வணிக மற்றும் தொழில் கழகத்தின் பொதுச் செயலாளர் திரு. P. தங்கப்பன் வகுப்புகளைத் தொடங்கி வைத்துச் சிறப்புரை ஆற்றினார். திரைப்படத் தொகுப்பாளர் திரு. B.லெனின் வாழ்த்துரை வழங்கினார். முன்னதாகக் கல்லூரி முதல்வர் சே. குமரப்பன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். நிகழ்வின் நிறைவாகப் பேராசிரியர் பாலசந்திரன் நன்றி கூற நாட்டுப் பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது.

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

**உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

## நூல்

இப்படித் தோன்றி ஒடுங்கின தத்துவங்கள் – 36, அவையாவன :– பூதங்கள் – 5, ஸ்தூல சரீர தத்துவங்கள் – 6, சூக்ஷும சரீர தத்துவங்கள் – 20, காரண சரீரமான மாயை, அவித்தை – 2, இவற்றில் பிரதிபிம்பித்த சீவன், ஈசுரன் – 2, இவைகட்கெல்லாம் அதிஷ்டான சைதன்னியமாய் இருக்கின்ற பிரமம் – 1, இவையாம். இவைகளில் பூதங்கள் – 5 , மாயை – 1, பிரதிபிம்பரான ஈசுரன் – 1, பிரமம் – 1, ஆக இந்த எட்டும் சகல பிராணிகளுக்கும் சமுதாயமாக அனுபவிக்கப்படும். மற்றை இருபத்தெட்டும், அவன் அவனுக்கு பிருதக் ஆக அனுபவிக்கப்படும். அஃது எங்ஙனம் எனில், பிருதிவி தத்துவம் ஒன்று இறக்கில் எல்லோருக்கும் ஆதாரம் இல்லை. மழை மறுக்கில், எல்லோருக்கும் சலம் இல்லை. தேயு இல்லாதிருந்தால், பாகம் இல்லை. வாடை, தென்றல் இல்லாவிட்டால், வாயு இயக்கம் இல்லை. ஆகாசம் இறக்கில் ஒருவருக்கும் அவகாசம் இல்லை. மாயையும், மாயாப் பிரதிபிம்பரும் இறக்கில் சகல சமயங்களுக்கும் தெய்வம் இல்லை. பிரமம் இல்லையேல் ஒருவருக்கும் அறிவு இல்லை; ஆகையால் இந்த எட்டும் எல்லோருக்கும் சமுதாயமாம். பிருதக் எங்ஙனம் எனின், ஒருவனுக்கு ஸ்தூல சரீரம் இறக்கில், எல்லோருக்கும் ஸ்தூல சரீரம் இறவாதபடியினாலும், சூக்ஷும சரீரத்தில் ஒருவனுக்கு அங்க வைகல்யம் வந்தால், எல்லோருக்கும் வாராதபடியினாலும், முத்தராயிருந்த சுகர் வாமதேவர் முதலியோருக்கு அவித்தையும், சீவனும் இறந்துபோயிருக்க, மற்றையோருக்கெல்லாம் அவித்தையும், சீவனும் இறவாத படியினாலும், இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும், அவனவனுக்குப் பிருதக் என்பதில் சந்தேகமே இல்லை.

## உரை

முன்னர் விளக்கியவாறு தோன்றி ஒடுங்கக் கூடிய தத்துவங்கள் 36. தலையாய முதல் 36 தத்துவம் பூரண பிரம்மம் ஆகும். அது தோன்றுவதும் அழிவதும் இல்லை.

அதற்குத் தோற்றமும் ஒடுக்கமும் கூறுவது தத்துவங்களுடைய இருப்பையும் பணியையும் விளக்குவதற்காக மட்டுமே. மற்றைய 35 தத்துவங்களில் பூதங்கள் - 5, பருஉடல் தத்துவங்கள் -6, நுண்உடல் தத்துவங்களாகிய - (ஞானேந்திரியங்கள்- 5, அந்தக்கரணங்கள்- 5, கர்மேந்திரியங்கள்- 5, வாயுக்கள்- 5,) ஆக மொத்தம் - 20. மாயையும், அவித்தையும் ஆக 2 ஈஸ்வரன், ஜீவன் ஆக 2 ஆக இவை 35 தத்துவங்களும் தோன்றவும், ஒடுங்கவும் இடம் அளிக்கும், பூரண பிரம்மம் 36ஆவது தத்துவமாகும்.

இந்த 36 தத்துவங்களிலே ஐம்பூதங்களும் ஈஸ்வரன், மாயை, பிரம்மம் ஆகிய 8 தத்துவங்கள் அனைத்து அண்டங்களுக்கும், உயிர்களுக்கும் பொதுவானவை. மற்றைய 28 தத்துவங்கள் அந்தந்த உயிர்களுக்கு மட்டுமே ஏற்றவை. அனுபவங்கள் வேறுபடும். அனைத்துச் செயல்களும் தனித்தனியாக வேறுபடலாம்.

இது எவ்வாறு எனில், நிலம் இல்லையெனில் உயிர்கள் வாழ இயலாது. உயிர்களுக்கு இருப்பிடம் இல்லை. மழை இல்லையெனில் நீரில்லை. உயிர்கள் வாழ இயலாது. நெருப்பு இல்லையெனில் எப்பொருளும் பதப்படுத்த இயலாது. காற்று இல்லையெனில் மூச்சு இயங்காது. உயிர்கள் வெப்பத்தில் அழிந்துபடும். அதே போல் மாயையும், ஈசனும் இல்லாது போனால் உலகில் மதமோ, தெய்வமோ நம்பிக்கையோ இல்லாமல் போகும்.

பிரம்மம் இல்லையேல் அறிவு தோன்றாது. மற்றைய தத்துவங்கள் தோன்றவும் ஒடுங்கவும் இயலாது போகும். இவை எட்டும் எல்லாவற்றிற்கும் பொதுவானவை. இவை சமுதாயத் தத்துவங்கள் என்று சொல்லப்படும் (கூட்டுத்தத்துவம் அல்லது பொதுவான தத்துவங்கள்).

பின்னர்க் கூறிய 28 தத்துவங்கள் வெவ்வேறாக அனுபவிக்கப் படுவதால் பிரத்தியக் தத்துவங்கள் என்று அழைக்கப்படும். அனுபவங்கள் உயிர்களுக்கு உயிர் வேறுபடும். எப்படியெனில் ஒருவருக்குக் கண் தெரியாவிட்டாலும் காது கேட்கலாம். ஒருவர் இறப்பதால் அடுத்த உயிர்களுக்குப் பாதிப்பில்லை. அதே போல எல்லாத் தத்துவங்களும் அனுபவங்களும் மனிதனுக்கு மனிதன் வேறுபடும். ஞானிகளுக்கு மேற்கூறிய 28 தத்துவங்களும் ஒடுங்கி ஜீவன் முக்தராக இருந்தாலும் உடல் இருக்கின்ற காலம் வரை வாழ்ந்தே ஆக வேண்டும். மற்றையோருக்கு உடல் இருக்கின்ற காலத்திலே எல்லாத் தத்துவங்களும் செயல்படுகின்றன. எனவே இந்தத் தத்துவங்கள் அவரவருக்கும் தனிப்பட்ட தத்துவங்களாக அமையும் என்பதில் ஐயமில்லை.

## நூல்

இந்தத் தத்துவங்கள் முப்பத்தாறில், எப்போதும், தானாகவே காணப்படுகிற தத்துவம் ஒன்று. எப்போதும் தனக்கு அந்நியமாகக் காணப்படுகிற தத்துவங்கள் ஏழு. தான் ஆகவும், தனக்கு அந்நியம் ஆகவும், அனுபவிக்கப்படுகிற தத்துவங்கள் இருபத்தெட்டு; அஃது எங்ஙனம் எனில், அவத்தாத்திரய சாட்சியாய் இருக்கின்ற பிரம சைதன்னியம், எல்லா அவத்தைகளிலும், தான் ஆக விளங்குகையினாலும், மற்றைத் தத்துவங்கள் போலத் தனக்கு அந்நியமாக விளங்காதபடியினாலும், அந்தப் பிரம சைதன்னியம் ஒன்று மட்டுமே தான் ஆகக் காணப்படுகிறது. பஞ்ச பூதங்கள், மாயை மாயாப் பிரதிபிம்பர் ஆக ஏழும் தம் தம் தொழிலான வெட்டு, கொத்து, உழவு, பஞ்ச கிருத்தியம், தசாவதாரம் முதலானவை, ஒரு காலும் தன்னுடைய தொழிலாகக் காணப்படாத படியினாலே, தனக்கு அந்நியங்களே அல்லாமல் தான் ஆகமாட்டா. மற்றை இருபத்தெட்டுத் தத்துவங்களுள்ளே நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் கிருகஸ்தன்,

நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண், நான்கறுவல், சிவலை, கட்டையன், நெட்டையன், நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்று தான் ஆக வழங்குகிற, ஸ்தூல சரீரம் ஆறு தத்துவங்களும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்பட்டு என் மாடு, என் கன்று என்றாற்போல, என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைத்தது, என் சரீரம் பிறந்து இத்தனை நாளாயிற்று என்று, தான் வேறு தூல சரீரம் வேறாக வழங்குகிறபடியினாலும், நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன், இந்தப் பஞ்சத்திற்குச் சீவித்தேன் என்று தான் ஆக வழுங்குகிற சூக்ஷும சரீர தத்துவங்கள் இருபதும், மற்றொரு வேளையிலே, தனக்குப் புறம்பட்டு, என் வீடு, என் உடைமை(என் மாடு என் கன்று) என்றாற்போல, என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என் கை, என் கால், என் மனம், என் புத்தி, என் அகங்காரம், என் சித்தம், என் பிராணன் என்று, தான் வேறு, அவைகள் வேறாக வழுங்குகிறபடியினாலும், நான் அறிவேன், அறியேன் என்று, தான் ஆக வழங்குகிற அஞ்ஞானமும், சிதாபாசனும், மற்றொரு வேளையிலே தனக்குப் புறம்பட்டு, என் அஞ்ஞானம், என் சீவன் என்று வழங்கக் கண்டபடியினாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவங்களும், தான் ஆகவும், தனக்கு அந்நியம் ஆகவும், வழங்குகின்றது சித்தம்.

## உரை

மேற்கூறிய தத்துவங்கள் 36ம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். தானாக மட்டுமே இருக்கக் கூடிய மூல தத்துவம் பிரம்மம் ஆகும். பிரம்மம் தனக்கு வேறாக எதையும் எப்பொழுதும் எவ்விடத்தும் செய்யாததாலும், இல்லாததாலும் அதனைத் தானாகவே மட்டுமே உள்ள மூலத் தத்துவம் என்று சொல்லலாம்.

அடுத்ததாக தனக்கு வேறாகவே பிறவற்றிற்கும் பிறருக்கும்

பயன்படக் கூடிய தத்துவங்கள் 7. அவையாவன:

| | |
|---|---|
| பூதங்கள் | 5 |
| மாயை | 1 |
| ஈஸ்வரன் | 1 |
| | 7 |

ஐம்பூதங்களின் செயலால் மட்டுமே உயிர்கள் வாழ முடியும். மழை, காற்று, நெருப்பு, இவைகள் செயல்படுவதால் உயிர்களுக்கு நன்மையே ஒழிய ஐம்பூதங்களுக்கு எந்த விதமான நஷ்டமோ லாபமோ கிடையாது.

அதைப் போலவே ஈஸ்வரனின் தொழில்களான ஆக்கல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்து உயிர்கள் வாழுவதற்கும், ஆன்மீகம் உயர்வதற்கும் காரணமாக அமைகின்றன.

ஈஸ்வரன் எடுக்கின்ற அவதாரங்களும், உயிர்களுடைய நன்மைக்காக அன்றித் தனக்காக இல்லை என்பதாலே இவை தனக்கு அன்னியமான செயல்களை மட்டுமே செய்யக் கூடியவை. மீதமுள்ள 28 தத்துவங்களும் தனக்காகவும், தனக்கு அன்னியமாகவும் செயல்படுபவை. இது இரு வகை. எப்படியென்றால் நடக்கின்றேன், பார்க்கின்றேன், கேட்கிறேன், உணர்கிறேன் எனத் தன்னுடைய அனுபவத்திற்காகவும், தன்னுடைய நன்மைக்காகவும் செயல்படக் கூடியவை. அதேபோல எனது வீடு, எனது உயிர், எனது மனைவி என்று தனக்கு அன்னியமாக உள்ளவற்றிற்காகவும் செயல்படுபவை. எனவே இந்த 28 தத்துவங்களும் தனக்காகவும், தனக்கு அன்னியமாகவும் செயல்படக் கூடியவை என்பதை அறியலாம்.

*தொடரும்....*



சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

# திருநீலநக்க நாயனார் வரலாறு

நாளும் நால் வேதங்களும் ஓதும் வேதியர்கள் பல்லோர் நிறைந்த சாத்தமங்கை எனுந் திருத்தலத்தில் எழுந்தருளியவர் திருநீலநக்கர். நித்தலும் ஆகம முறைப்படி 'அயவந்தி' உறைகின்ற சிவனாரைப் பூசை செய்து வழிபடுகின்றதுடன் அடியாரையும் பணிந்து அர்ச்சனை புரிவதும்

"வேதம் உள்உறை ஆவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவர் அடியாரையும் நயந்து
பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும்"
என்ற கடப்பாடும்

"அத்தர் அன்பர்க்கு அமுது செய்விப்பது முதலா
எத்திறத்தன பணிகளும் ஏற்று எதிர் "செய்கின்ற தொண்டும் ஏற்று வாழ்ந்தவர்.

ஒரு நாள் அயவந்தி திருத்தலத்தில் மனைவியின் உதவியுடன் உரிய வகை பூசைகள் முடித்தும் - சிவனார் திருமுன் ஐந்தெழுத்தை ஓதி அமர்ந்திருந்தார்.

அது சமயம் ஒரு சிலந்தி எம்பிரான் உருவத்தின் மேல் அமரக்கண்ட மாது நல்லார் பதறி எழுந்து ஊதி விரட்டுகிறார்.

மேருச்சிலையில் சிலம்பி விழ - நாயகிக்கோ சிறு குழந்தையாக ஈசன் தெரிகிறார். சிலம்பியால் துயர் வருமே என்று,

"எழுந்த அச்சமொடு இளங்குழவியில் விழும்
சிலம்பி, ஒழிந்து நீங்கிட ஊதி முன் துமிப்பவர்
போலப் பொழிந்த அன்பினால் ஊதிமேல் துமிந்தனர்"

கண்டார் நாயனார். எழுந்தது கடும் சீற்றம்: "எம்பெருமான் மீது

எச்சிலைத் துப்புகிறாயே உனக்கு மூளையே இல்லையா?" என வெகுண்டு எழுந்து சத்தம் போடுகிறார்.

'சிலந்தி வந்தது அதனைத் துரத்தினேன்'

சிலந்தியைத் துரத்த வேறு வழியே இல்லையா! கூறு கெட்டவளே

"இனைய செய்கை இங்கு அநுசிதம்"

செய்யக்கூடாத தவறைச், செய்தவளே 'இங்கு இனி உன்னைத் துறந்தேன்' என்று சொல்லி, நாயகியை விட்டு விட்டுச் சென்று விடுகிறார்.

நாயனார்க்கு இறைவடிவம் புனிதமானதாகத் தெரிகிறதே ஒழிய உயிருள்ளதாக எண்ணவில்லை. நாயகிக்கோ, உயிரும் உணர்வும் கொண்ட குழந்தையாகத் தென்படுகிறான். சிலந்தியால் இடர்ப்படுமே என்று பதைபதைத்துத் தனக்கு உடன் தோன்றிய விதத்தால் அந்த இடர் தவிர்க்கிறார். தாயுள்ளம் குழந்தைக்கு இடர், துயர் என்றால் பதறுமே தவிரச் சிந்திக்காது. உடன் தோன்றுகிற துயர் மாற்றும் வழியைக் கடைப்பிடித்துவிடும். அது போலத்தான் நாயகிக்கு ஈசன் ஆகிய குழந்தைக்குச் சிலந்தியால் துயர் என்று எண்ணிய உடன் பதறிப்போய் ஊதித்துரத்துகிறார். இங்கே உணர்வு ஓங்கி நிற்கிறது. அறிவு அடங்கி நிற்கிறது.

இதே போல ஈசனுடைய மேருச் சிலையைக் குழந்தையாகக் கண்டவர் மற்றொருவர். கண்ணில் ரத்தம் வரப்பார்த்துப் பதறித் தன் கண் இடந்து அப்பிய கண்ணப்பரும் லிங்கமாகப் பார்க்கவில்லை. உயிருள்ள குழந்தை தனியாக இருப்பதாக எண்ணியதால் தான் கண்ணிடந்து அப்புகிறார்.

நாயனார் நாயகியைத் துறந்து வீடு சென்று கவலையின்றித் தூங்குகிறார். நாயகியோ அவர் பக்கம் செல்லக்கூட அஞ்சித் திருக்கோயிலிலேயே தங்கிவிடுகிறார்.

அன்பே உருவான அண்ணல், நாயனார் கனவில் தோன்றி நாயகியார் அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறார். நாயகியின் எச்சில் பட்ட இடத்தைத் தவிர மற்றெங்கும் கொப்புளங்களோடு காட்சி தருகிறார், ஈசன் அன்பை உணர்ந்த நாயனாரும், நாயகியை வந்து அழைத்துச்சென்று முன்னையில் பெருகிய மகிழ்ச்சியோடு இல்லறம் நடத்தி, பூசனைகள் செய்து வாழ்கிறார்.

பின்னர் சீர்காழி வேந்தர் நட்பால் அவர்தம் திருமண நாளன்று இருவரும் சிவனடி சேர்கின்றனர்.

## கலிக்கம்பர் வரலாறு

கலிக்கம்பர் பெண்ணாடம் என்று இன்றழைக்கப்படும் பெண்ணாகடம் என்னும் ஊரில் பிறந்த வணிகச்செல்வர்.

........ அடித்தொண்டு பற்றிப் பணி செய் கலிக்கம்பர் என்பார் மற்றுமோர் பற்று இலார்.

அவர் தம் ஊருக்கு வருகின்ற அன்பர்க்கு அமுது படைப்பதும் மற்றைய உதவிகள் புரிவதுமே கடமை எனக்கொண்டவர்.

வந்தவரை வரவேற்று அவர்தம் திருவடிகளை விளக்கி மரியாதையுடன் அன்னம் படைப்பது வழக்கம். ஒருநாள் அவ்வாறு அடியார்கள் திருவடி விளக்கும் காலத்து நீர் வார்த்துக் கொண்டிருந்த அம்மையார் ஒரு அடியார்க்கு நீர் வார்க்கச்சற்றே தாமதம் செய்து விட்டார். திருவடி துலக்கிக் கொண்டிருந்த நாயனார் சினத்தோடு நிமிர்ந்து பார்க்கிறார். காரணம் புரிகிறது. வந்திருக்கின்றவர் முன்னர் இவர் மனையில் ஏவல் செய்த வேலைக்காரர். இவர்க்கா நாம் பாதம் துலக்க வேண்டும் என்று நாயகி சிந்தித்து நீர்வார்க்காது நிறுத்தியதாக நாயனார் எண்ணி விடுகிறார்.

ஏன் தாமதம் ? காரணம் கேட்கவில்லை. சர்ரென்று தன் வாளை எடுத்தார்; அம்மையாரின் கரத்தைத் துண்டித்து விடுகிறார். அடுத்தும் அதுபற்றி வாதம் பிரதிவாதம் ஏதும் செய்யவில்லை.

தாமே நீரெடுத்து பாதந்துலக்கி, வந்தார் யாவர்க்கும் அமுது படைத்து உபசரிக்கத் தொடங்கி விடுகிறார்.

பாருங்கள் - தவறு செய்தவர் தன் மனைவி என்றோ பெண் என்றோ பேதம் இல்லை. செய்த தொண்டில் குறை செய்தவர் தண்டிக்கப்படுகிறார். இங்கே உறவை முன்நிறுத்திச் சிந்திக்க முடியாது. ஏனெனில் உறவு முறைக்காகச் சினம் ஏற்பட்டு இருந்தால் வாதப்பிரதிவாதம் தோன்றியிருக்க வேண்டும். தன்னுடன் தொண்டு செய்ய ஒப்பியவர் அடியவர் தராதரம் பார்த்துத் தொண்டை நிறுத்துவது ஏற்புடைத்து அன்று. தவறு. தண்டிக்கப்பட வேண்டும். இதுவே அடியாரின் எண்ண ஓட்டம். எனவே மனைவி, பெண் என்ற கண்ணோட்டம் இங்கில்லை.

அடியார்க்கு ஒரே குறி - வந்துள்ள சிவனடியார்கட்கு அமுது படைப்பது ஒரே குறிக்கோள். இடையூறு எது ஆயினும் தவிர்க்கப்பட வேண்டும்; தண்டிக்கப்பட வேண்டும்.

இந்த ஒருமுக எண்ணத்திற்குத்தான் இறைவன் அருள்பாலித்துத் தண்ணடி நிழலில் சேர்த்துக்கொள்கிறான்.

## கழற்சிங்கர் வரலாறு

கழற்சிங்கர் பல்லவ குலத்தைச் சேர்ந்த மன்னர்; நல்ல சிவத்தொண்டர்.

"குவலயத்து அரனார் மேவும்
கோயில்கள் பலவும் ஒன்று
சுவலரும் அன்பின் தாழ்ந்து
தக்க மெய்த்தொண்டு செய்வார்"

அப்படி ஒரு நாள் தன் மனையாளாகிய பட்டினத்து ராணியுடன் திருவாரூர்த் திருத்தலத்தில் திருக்கோயிலுக்கு வந்து வணங்குகிறார். இவர் ஈசன் சந்நிதியில் வணங்கி மெய் மறந்து நிற்க, ராணி கோவில்

வலம் வந்து எல்லாவற்றையும் கண்டு மகிழ்ந்து ரசிக்கிறாள். அப்படி வரும் வழியில் பூக்கட்டும் இடத்தில், தான் இதுவரை பார்த்திராத அழகான புதுவகை மலர் ஒன்று கிடந்தது. அதனை எடுத்து ஆசையுடன் முகர்ந்து பார்க்கிறார்.

இதனைப் பார்த்த, பூக்கட்டிக் கொண்டிருந்த, செருத்துணை நாயனார் என்னும் சிவனடியார் கடுஞ்சினங் கொண்டு அரசியின் மூக்கை அறுத்து விடுகிறார். இந்தச் செய்தி அரசன் காதுக்குப் போகிறது. பதறி வருகிறான். காட்சியைப் பார்க்கிறான். தன் மனையாளின், பட்டத்து அரசியின், மூக்கை அறுத்தது யார் எனக் கேட்கிறான். கேட்பவன் அரசன், அறுபட்டது அரசியின் மூக்கு; இருந்தாலும் அடியவர் அஞ்சவில்லை. முன்னே வந்து மூக்கறுத்த காரணத்தைக் கூறுகிறார். கேட்ட மன்னவனோ அடியாரைச் சினக்கவில்லை. செய்த தவறுக்குக் கொடுத்த தண்டனை போதாது முகர்ந்த மூக்கை அரிந்தால் போதாது; எடுத்த கரத்தையும் அறுத்திட வேண்டும் என்று வாள் எடுத்து மாதரார் கரத்தை வளையொடும் அறுத்து விடுகிறார்.

பார்த்தார் ஈசர். நாடகமும் தண்டனையும் போதும் என்று எண்ணிக் காட்சி தந்து யாவர்க்கும் திருவடி நிழல் தந்தார்.

சிவன் பணிக்குக் கெடுதல் அல்லது தடை; இது தான் தண்டனைக்குக் காரணமே தவிரச் செய்தவர் யார் என்ற கேள்வி தண்டித்த இருவர் நெஞ்சிலும் எண்ணத்திலும் ஓடவே இல்லை.

ஈசற்கு உரிய மலரை எடுத்த கை-முகர்ந்தது; மூக்கு அறுபட்டன இரண்டும் இதுதான் உண்மை. செய்தது அரசியா இல்லை வேறொருவரா? கேள்விக்கே இடம் இல்லை.

இருநாயனார் நெஞ்சிலும் இறைவன் பணி நிறைந்திருந்தது. எனவே தவறு சிறிதா பெரிதா. விசாரணை, சட்டம் தடை போன்றவை இடம் பெறாது. தண்டனை உடன் தரப்படுகின்றது.

***முற்றும்***

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### I/02/02 சுகர் கதை :

( **முற்குறிப்பு** : முனிவர்களுள் பெரிதும் போற்றப்படுபவரான சுகப்பிரம்மம், வேதவியாசரின் மகனாவார். இக்கதையில், அவர் பிரம்ம நிலையை அனுபவ உணர்வாகப் பெறும் முன்னர், சுகர்(சுகன்) எனும் மாணவராக இருந்த காலத்தே உண்டான ஐயப்பாட்டு நிலை பற்றிக் கூறப்படுகிறது).

**கதைப்பகுதி :** சுகப்பிரம்ம முனிவரின் கடந்த காலக் கதையை, விசுவாமித்திரர் கூறப்போகிறார் என அறிந்த அவையோரும், விண்ணோரும் கூட உவகையடைந்தனர். அவர் கூறுவதைக் கேட்க அனைவரும் ஆவலுற்றனர். விசுவாமித்திரரும் கீழ்க்கண்டவாறு கூறத் தொடங்கினார்:

முற்காலத்தே, சுகர், அவர்தம் தந்தையிடமே சாத்திரம் படித்து உபதேசமும்(பரோட்சஞானம்) பெற்றார். ஆனால், அதன் பின்னரும் அவருக்கு அநுபூதி-தற்பர அனுபவ உணர்வு - எனும் அபரோட்ச ஞானம் கிட்டவில்லை. அவர், மாயை பற்றிய ஓர் ஐயத்தோடு தந்தையாரை அணுகினார்.

> **"இடருறு மாயை வந்ததெங்ஙனம் இறப்பது எங்ஙன்**
> **தொடர்பில் ஆருடையது எம்மட்டு என்று இது தோன்றிற்று"**

எனக் கேட்டார். தம் மகன், சாத்திரம் கேட்டலை(சிரவணம்) முடித்திருப்பினும் அதில் பூரண நம்பிக்கை(சிரத்தை) இன்னும் உண்டாகவில்லை என்றும் அதனாலேயே ஐயம் உண்டானது எனவும் புரிந்து கொண்ட வியாசர் ஜனக அரசரிடம் சென்றால் இதற்கான தெளிவு கிட்டும் என்று சுகருக்கு அறிவுறுத்தினார்.

ஞானத் தேடுதல் பற்றிய சுகரின் உறுதி எத்தகையது எனச் சோதிக்க விரும்பிய ஜனகர், அவரைச் சிலநாட்கள் காக்கவைத்தும், விருந்து மற்றும் விளையாட்டுக்களில் ஈடுபடுத்தியும் பார்த்த பின்னர், ஞானம் பெறுவதற்கான பக்குவத்தைச் சுகர் அணுகியுள்ளமைக்கான காரணத்தை வினவினார். மாயை பற்றிய சுகரின் ஐயத்திற்கான அருள்மொழி(உபதேசம்) கூறினார். அப்போதும் ஐயம் தீராத சுகர்,

"இம்முறை அறிந்தேன் நீயும் எந்தையும் அதுவே சொன்னீர்
மொய்ம்முறை நூல்களெல்லாம் மொழிபொருள் ஒன்றே"

எனக்கூறி, "என் ஐயம் இன்னும் தீரவில்லை, அநுபூதிநிலையும் கிட்ட வில்லையே" என்றார்.

சுகர் விரும்பிய அநுபூதிநிலை கிட்டாமைக்குக் காரணம் யாது என மறுபடியும் ஜனகர் அருள்மொழி கூறத் தொடங்கினார். (இது தத்துவப் பகுதி). இத்தகைய - பின்னதான - இரண்டாம் உபதேசத்தால், தெளிவும் நிறைவும் கிட்டிய சுகர், அதன் பின்னர் சமாதி நிலையடைந்து, அவர் விரும்பியவாறே பிரம்மஞானியாக உயர்வுற்றார்.

ஐயப்பாட்டு நிலையில் சுகரை ஒத்த ஸ்ரீராமரும், மற்றவர்களும் கூட, உபதேசம் பெறவேண்டியுள்ளது. இத்தகைய உபதேசத்தை அருளக்கூடியவர் குலகுருவான வசிட்டரே எனக் கூறிய விசுவாமித்திரர், "நம் சித்தம் அமைதியுறுவதற்காக, முன்னம் நான்முகன் நமக்கு உபதேசித்த ஞானத்தை, தற்போது ஸ்ரீராமருக்கு அருள்வீராக" என்றார். இதனைத் தசரதரின் அவைக்கு வந்திருந்த நாரதரும் ஆமோதித்தார். வசிட்டரும்,

"கலைமுனியே நீர்மொழிந்த படியே செய்வேன்
- கற்றுணர்ந்த பெரியோர் சொல் கடப்பார் யாரே"

எனக் கூறினார். மேலும்,

"தொலைவுஇல் பரபதம் எவர்க்கும்

- தோன்றுமாறு சுத்த விநயத்துடனே சொல்வான்"

என இக்கதை முடிவுறுகிறது.

**தத்துவப்பகுதி :** பரோட்ச ஞானமடைந்த சுகருக்கு, முன்னதாகக் கிட்டாத அநுபூதி நிலை, பின்னர் எவ்வாறு கிட்டியது எனும் ஸ்ரீராமரின் கேள்விக்கு விடையாக இப்பகுதி அமைந்துள்ளது. பரோட்ச ஞானம் பெற்றவன், அபரோட்ச ஞானம் அடையுமுன், உலகில் வாழவேண்டியுள்ளது. உலகியல் அவனுக்கு எண்ணங்களைத் (சங்கற்பம்) தோன்றச் செய்து, அது உலகப் பற்றினை (பந்தம்) உண்டாக்கும். பந்தமானது அனுபவிக்கும் விருப்பம் (போக இச்சை) உண்டாக்கும். போக இச்சையானது ஆழ்மனப் பதிவுகளுக்குக் (வாசனை) காரணமாகும். இப்பிறப்பு மற்றும் முற்பிறப்பு வாசனைகள் மறுபடி உலகப் பற்றினை உண்டாக்கி, இத்தகைய சுழற்சியைப் பெரிதாக்கும். சங்கற்பம், போகம், பந்தம், வாசனை, உலகியல் ஆகியனவும், அவற்றால் உண்டாகும் துன்பங்களும் மாயையின் செயல்கள் எனவும், விலக்கப்பட வேண்டியவை (உபாதி) எனவும் சாத்திர சிரவணம் செய்து முடித்து விட்ட மாணவன், உண்மையல்லாத மாயையைப் பற்றி ஐயம் கொள்ளுதல், அபரோட்ச ஞானத்திற்குத் தடையாகிறது. இதனை வலியுறுத்தி,

"அவ்வறிவு சங்கற்பத்தால் கட்டுண்ணும்

அதுவிடில் வீடுறும் அந்த அறிவுதன்னைச்

செவ்விதின்நீ அறிந்தனையால் போகத்துஇச்சை

செகக்காட்சி அனைத்தினையும் தீர்த்தியானாய்"

எனக் கூறப்பட்டுள்ளது. மேலும்,

"மன்னன் அதற்குஉரை செய்வான் முனிவநீயே

மதித்து உணர்ந்தும் பிதாஉரைக்க மறுத்தும் கேட்டாய்

அந்நிலையே நிச்சயம் இங்கு அகண்டஞான

ஆகாய புருடன்உளன் அயலொன்றில்லை"

எனவும் ஜனகர் உபதேசித்தார்.

பிற்குறிப்பு : வசிட்டரின் "பரபதம் எவர்க்கும் தோன்றுமாறு" எனும் கூற்றினால், அவரது அருள்மொழிகேட்க நாமும் தகுதி உடையவர்களே என்பது வெளியாகிறது. சாத்திர அறிவு மற்றும் குருசிரவணம் முடித்தபின்னர், அநுபூதி நிலை தானாக வராது, அதனைப்பெறச் சாத்திரம் மற்றும் குருவின் சொல்லில் முழுநம்பிக்கை (சிரத்தை)யுடன் உலகியலை எதிர்கொள்ள வேண்டும், தாமரை இலை நீர் போல இருத்தல் வேண்டும், மற்றும், இத்தகைய தன் முயற்சியை விடாது செய்யின் நாம் தற்பர நிலையடைவோம் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இத்துடன் விசுவாமித்திரரின் அருளுரை முடிகிறது. அடுத்ததாக, வசிட்டரின் உபதேசம், இரண்டாம் பிரகரணமான முமூட்சு (வீடுபேற்று விருப்புடையவன்) பிரகரணத்தில் தொடர்கிறது.

*தொடரும்....*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### திருநாட்டுப் படலம்

### திணைமயக்கம்

வரைய(து) ஆகிய அரங்கினில் மயில்மகள் கானத்
தரைய வாம்முகில் முழவதிர் தரநடம் நவிற்றும்
புரைஇல் அங்(கு)அது கண்டுகான் கொன்றைபொன் சொரிவ
விரைய உள்உவந்(து) ஏற்பன வெற்புறை காந்தள். 71

கான கம்பயில் குடம்புரை செருத்தஆன் கன்று
வான்அ மர்ந்(து)இனி(து) உண்ணஎஞ் சியமுலைத் தண்பால்
ஆன(து) ஒண்பணை அம்புயத் தடம்புனல் அளாவ
மான ஓதிமம் நீர்பிரித்(து) உறஉண்டு வளரும். 72

மருதின் மேற்படர் வயலைவாம் கடல்கரும் புன்னைப்
பெரும ரத்தலை வளைத்திடு ஞாழல்மேல் பிறங்கும்
பொருக டல்துகிர் வஞ்சியின் தலைவளைஇப் பொலியும்
இருநி லத்தவர் உடன்றுதம் குடுமிபற் றிடல்போல் 73

குரவு பாலையின் ஏந்துபா லைக்குவண் குறிஞ்சி
விரவு தேன்தரும் கானமான் பால்தரும் விரிநீர்ப
புரவு சால்பணை மாங்கனி நல்கும்ஒண் பூணா
உரவு நீர்க்கடல் பவளம்முத்(து) எடுத்(து)எடுத்(து) உதவும் 74

இன்ன பல்வளம் மருவிய பாண்டிநாட்(டு) இயல்பை
என்ன சொற்றனன் நெல்லைநா யகியொடும் எம்மான்
மன்ன ஓங்கிய கழனிமா நகர்ப்பெரு வளத்தும்
தன்ன மோதுவன உய்திறம் உறுதலால் தமியேன் 75

*திருநாட்டுப் படலம் நிறைவுற்றது.*

ஆக விருத்தங்கள்.107

## திருநகரப் படலம்

பண்கவர் மொழியொடு பரமர் மேவிய(து)
ஒண்கவர் மதியினார் உவந்து சேர்வது
மண்கவர் நகர்எலாம் வழுத்தும் சீரது
கண்கவர் பெருவளக் கழனி மாநகர். 1

திருமகள் தொழத்தகும் திருவம் வெள்ளிய
உருமகள் தொழக்கலை உதவும் வீரம்அப்
பெருமகள் தொழத்தகும் பிறங்கல் ஈன்அருள்
கருமகள் பாகனார் கழனி மாநகர் 2

அற்பகம் பொலிதர அடைந்து ளோர்க்கெலாம்
பொற்(பு)அகம் பொலிதரு போகம் நல்கலால்
வெற்(பு)அகம் பிறந்தவள் வே(று)உண்(டு) ஆக்கிய
கற்பகம் நிகர்வது கழனி மாநகர் 3

விண்நுதல் வரம்எலாம் வீசி ஈற்றினும்
எண்ணுதல் சிறிதும்இன்(று) இருக்கும் நீர்மையால்
ஒண்நுதல் ஒருபதம் உவப்ப மேவிடு
கண்நுதல் நிகர்வது கழனி மாநகர். 4

அருமறை பகர்கயி லாய நாதனே
பொ(ரு)அரு மகாரொடும் பூவை யாளொடும்
ஒருஅரும் திருநகர் ஒருவி வைகுமேல்
கருதரும் திறத்தது கழனி மாநகர் 5

வான்உயர் மாடம்மால் வரைக ளேஎனத்
தான்உயர் நகரம்ஓர் தரணி என்னலாம்
மீன்உயர் கருங்கடல் விரிந்த பைந்தழை
யால்உயர் கருஞுமி(று) அளாய சோலையே. 6

வளநகர் மதியம்அம் மதியம் சூழ்தரு
தளர்(வு)இல்ஊர் கோள்அயல் சார்ந்த பைம்பொழில்
கிளர்ஒளி உடுக்கணம் கெழுமும் அப்பொழில்
அள(வு)அறப் புறத்(து)இடை அரும்பும் போ(து)அரோ 7

வளைதரு சோலைமா மலரி னின்(று)இழி
விளைபசுந் தேன்பெரு வெள்ளம் மீ(து)உயர்
தளைஎறி குடிஞையாய்ச் சலதி சார்ந்தவண்
அளைஉவர் அகற்றிடும் அகிலம் உய்யவே. 8

யான்தரு காய்இலை என்னில் எங்கணும்
வான்தரு தெய்வமும் வயங்கல் இல்லைஎன்(று)
ஊன்தரு குலிசிஊர் உட்க ஓங்குவ
தேன்தரு பதம்பொலி தென்னஞ் சோலையே. 9

வெல்வலிச் சிவபிரான் விழிகொண் டால்என
ஒல்வகை மூன்றுகண் ஒருங்கு கொண்டதாய்
நல்வளம் உடைமையின் அதிகம் நாம்என்றே
செல்வரப்(பு) உயர்வன தென்னஞ் சோலையே. 10

வாட்டுவெம் கதிரவன் வலவன் செல்வழி
மூட்டுவெம் தாகநோய் முதிர்ச்சி தீர்தர
மாட்(டு)உயர் தெங்(கு)இள நீரை வௌவுவன்
ஊட்டும்எவ் விடம்பயின் றாலும் ஊழ்அரோ 11

தனைவெறுத்(து) அருந்தவர் தவம்செய் மாநகர்
தனைவளைத்(து) அமர்க்கவேள் சார்ந்து வெஞ்சிலை
தனைஅறக் கொண்(டு)எனத் தழைக ரும்புகள்
தனைஅறக் கழனியுள் தழைவ எங்கணும். 12

கழைஅமர் சா(று)எலாம் கால வன்மைசெய்(து)
உழைஎறி வனஉறு கோதை ஆலைகள்
விழையுமா(டு) அவர்பொருள் அனைத்தும் வீசிடக்
குழைதல்செய்(து) அகற்றுபொன் கோதை மாரினே 13

நிறைதரு பாசிலை அரம்பை நீள்வனம்
கறைகெழுப் பொங்கிய கடல்நி கர்க்குமால்
பிறைஅதன் மேல்தவழ் பெற்றி அக்கடல்
அறைபுனல் மேல்தவழ் அம்பி போலுமே. 14

நெட்(டு)இலை வாழைநீள் குருத்தின் உச்சியில்
ஒட்டிய பிறைதறை ஆய மொட்(டு)அவன்
மட்(டு)அவிழ் கற்பக மாலை யால்மிசைப்
பட்டிடத் தொடுபிறைப் பாணம் போலுமே. 15

பிறைநுதல் பேர் அருள் நெல்லை நாயகி
நிறைதரக் காத்தலின் நிலவு நெற்பயிர்
அறையும்அந் நன்றியை அறிந்த வாம்என
இறைகெழு கதிர்களால் எதிர்வ ணங்குமே. 16

நீடிய பேர் அருள் நெல்லை நாயகி
கூடிய காத்தலில் குளிர்செ ழும்பணை
பாடிய எதிர்உப காரப் பண்(பு)என
மூடிய கதிரினால் முத்(து)இ றைக்குமே. 17

இறைவன் கொற்றவாள் ஈசன் பால்பெறும்
இறைதரு வாள்விதிர்த்(து) ஒருவன் இன்(று)என
நிறைபுனல் பெருந்தடம் நின்று நீள்கரை
உறைகமு(கு) அருகுசேல் உகண்டு தாவுமே 18

தொடரும்...

## இலக்கியப் பூங்கா உரை

## இளையான்குடி மாற நாயனார் (தொடர்ச்சி)

( நீ. இரவிச்சந்திரன், வேதாந்த மாணவர் )

இருளூடும் மழையூடும் போன கணவன் ஒருவழியாக நெல்மணிகளை வாரிக் கொண்டு வந்தவுடன் அதை ஆவலுடன் வாங்கிப்போய்ச் சேற்றைக் கழுவிப் பக்குவப்படுத்திய பின்னர்தான் தெரிகிறது அதை வறுத்து அரிசியாக்க விறகு இல்லை என்று.

உணவு தயாரிப்பதற்குப் பகலில் வயலில் விதைத்த நெல்மணிகளை வாரிக்கொண்டு வரலாம் என்ற உபாயம் மாறனாருக்குத் தோன்றவில்லை. அவருடைய மனைவிக்குத்தான் தோன்றியது. ஆனால் சமைக்க விறகு இல்லை என்று கூறியவுடன் உடனே ஓர் உபாயம் மாறனாருக்குத் தோன்றிவிட்டது.

விறகுதானே கொஞ்சம் இரு என்று வீட்டின் மேற்கூரையில் நீட்டிக் கொண்டிருந்த கழிகளை அறுத்து வீழ்த்தினார். வீழ்த்திய கழிகளை விறகுகளாகப் பயன்படுத்திச் சோறு சமைத்தாகிவிட்டது. தொட்டுக் கொள்வதற்குக் கறியமுது வேண்டுமே என்ன செய்வது ? என்று தன் கணவனிடம் பணிவோடு விண்ணப்பம் செய்கிறார்.

மனைவியாரின் விண்ணப்பத்தைக் கேட்டவுடன் மாறனார் வேகமாகத் தோட்டத்திற்குச் செல்கிறார். அங்கு முளைத்திருக்கும் குழியினின்றும் மேற்செல்லாத சிறுசிறு கீரைவகைகளை வேரோடு பறித்துக் கொண்டு வருகிறார்.

கீரைகளை மாறனார் வேரோடு பறித்து வந்ததற்குச் சேக்கிழார் பெருமான் ஓர் அழகான சித்தாந்த உவமை கூறுகிறார்.

குழிநிரம் பாத புன்செய்க்
குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப்
பறித்தவை கறிக்கு நல்க.

கீரை எப்படி வேரோடு பறிக்காவிட்டால் மீண்டும் முளைவிடுமோ அதுபோல் இந்த உலகியல் பொருள்களின் மீது சிறிதளவு பற்று இருந்தால் கூட அது மேலும் மேலும் பிறவிக்கு உட்படுத்தும். எனவே அதை முற்றாகக் களைதல் வேண்டும் என்பது போலக் கீரைப் பயிர்களை வேருடன் பறித்து வந்தார் என்று உவமை கூறுகிறார்.

அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும்

தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே

என்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் குமரகுருபரர் கூறும் உவமையை இதனோடு ஒப்புநோக்கலாம்.

மாறனார் இப்படி வேரோடு பறித்துவந்த கீரைகளை, விரும்பி உண்ணும் வகையில் நன்கு சமைத்து உணவு தயாராகி விட்டதைக் கூறுகிறார்.

**பேரொளிப் பிழம்பாய் இறைவன் காட்சி :**

இருவரும் சேர்ந்து களைப்புடன் படுத்திருக்கும் அடியாரிடம் சென்று அவரை உணவுண்ண அழைக்கிறார்கள். இறைவன் அழைத்தவர்கள் வியக்கும்படியாகப் பேரொளிப் பிழம்பாகக் காட்சி தருகிறான். பின்பு இடப வாகனனாய் உமையம்மையோடு தோன்றி மாறனாரையும் அவர்தம் மனைவியாரையும் நோக்கி,

அன்பனே அன்பர் பூசை
அளித்தநீ அணங்கி னோடும்
என்பெரும் உலகை எய்தி
இருநிதிக் கிழவன் தானே
முன்பெரு நிதியம் ஏந்தி
மொழிவழி ஏவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க என்றே
அருள்செய்தான் எவர்க்கும் மிக்கான்.




அடியவனே அறம் வழுவாது அடியவர்களுக்கு அனுதினமும் உணவளித்து வந்த நீ உனது மனைவியோடு எம் சிவலோகத்தை

அடைந்து சங்கநிதி பதுமநிதி ஆகிய இரு நிதிகளையுமம ஏந்திக் குபேரன் உடன் ஏவல் கேட்க நீ இன்புற்று இருப்பாயாக என்று அருளி மறைந்தார் இறைவன்.

**சில நுட்பங்கள் :-**

மாறனாருக்குக் காட்சிதந்த இறைவன் குபேரன் இருநிதியேந்தி ஏவல்கேட்க நீ இன்புற்று இருப்பாய் என்று ஏன் கூறவேண்டும்? ஏனென்றால் இளையான்குடி மாற நாயனாரை அறிமுகம் செய்யும் போதே இவ்வுலகில் செல்வச் செழிப்போடு குபேரனாக வாழ்ந்தார் என்று கூறிவிட்டபடியால், அவ்வுலகில் குபேரன் ஏவல்கேட்க வாழ்வாய் என்று ஒரு படி மேலாகக் கூறினார் சேக்கிழார் பெருமான்.

அதுபோல அடியாருக்கு உணவளித்த விதத்தைக் கூறும்போது நான்கு வகையுடனும் ஆறு சுவையுடனும் அளித்தார் என்று கூறுகிறார். சுவையான உணவளித்தார் என்று கூறினால் போதாதா ? ஏன் இப்படி விரித்துக் கூறவேண்டும் என்று பார்த்தால் பின்னர் வரும் பாடல் ஒன்றில்,

பண்டை நினைவினால் குறையை நேர்ந்து
திருவமுது அமைத்து என்று கூறுகிறார்.

நான்கு வகையாக ஆறு சுவையாகக் கறியமுது சமைத்து அடியார்க்கு வழங்கிய நாம் இன்று வெறும் கீரையை வைத்துக் கறியமுது சமைக்கும்படி நேர்ந்துவிட்டதே என்று மாறனாரின் மனைவியாரை ஏங்க வைக்கிறார் சேக்கிழார் பெருமான்.

அடியவர்க்குத் தொண்டு செய்வதும் அமுது செய்விப்பதுமே தம் வாழ்வின் குறிக்கோள் என்று வாழ்ந்த இளையான்குடி மாறநாயனாரின் வாழ்க்கை நமக்கு உணர்த்தும் செய்தி என்னவெனில், வளமையைப்போல வறுமையையும் இறைவனின் கொடையாகக் கருதி அறம் வழுவாமல் அன்பர் தொண்டு செய்து வாழ்ந்தால் ஏற்கனவே இருந்த வளமையைப் போல் பலமடங்கு வளமையை இறைவன் அருள்வான் என்ற நம்பிக்கையோடு வாழவேண்டும் என்பதே.

### விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**